# அமெலியாவின் பாதை

லிண்டா அல்ட்மன்
தமிழில் கிருஷ்ணன்



# அமெலியாவின் பாதை



லிண்டா அல்ட்மன்

தமிழில் கிருஷ்ணன்



அமெலியா லுயிசா மார்ட்டினெசுக்கு நெடுஞ்சாலைகளை கண்டாலே வெறுப்பு தான். வெகு நேரம் நீண்டு கொண்டே செல்கிற சாலைகள், வலைந்து வலைந்து செல்லும் சாலைகள், நடைபாதை உள்ள சாலைகள், புதிய இடங்களுக்கு கொண்டு செல்லும் சாலைகள், எந்த ஒரு இடத்துக்கும் கொண்டு செல்லாத சாலைகள் என எதுவுமே அவளுக்கு பிடிக்கவில்லை. அவள் அப்பா ஒவ்வொருமுறையும் வரைபடத்தை எடுக்கும் போதும் அவள் அழ தொடங்கி விடுவாள்.

அமெலியாவுக்கு தெரிந்த சாலைகள் அனைத்துமே தோட்டங்களுக்கு கூட்டி செல்பவை. அங்கு வேலையாட்கள் நாள் முழுவதும் சுடுகின்ற வெயிலில் ஓயாது வேலை செய்வார்கள். அவர்களுக்கு என்று கட்டப்பட்ட ஓட்டை உடைசல் நிறைந்த வீடுகளில் தங்கி கொள்வார்கள். அந்த சாலைகள் நீண்ட சோகமான சாலைகள் அவளுக்கு பிடித்த எந்த இடத்திற்கும் அவை இட்டு செல்லாது.



ஓயாமல் உழைக்கும் மக்களுக்கு எங்கு சற்று ஓய்வு கிடைக்குமோ அந்த இடத்திற்கு செல்ல வேண்டும். அமெலியாவுக்கு

அமெலியாவுக்கு அவளுடைய வீடு வெள்ளையாகவும், சுத்தமாகவும் இருக்க வேண்டும். அது நீல நிற திரை சீலை கொண்டிருக்க வேண்டும், இலைகள் நிறைந்த நிழல் கொடுக்கும் மரம் ஒன்று வாசலில் இருக்க வேண்டும் என்றும் ஆசைப்பட்டாள். அது போன்ற இடம் ஒன்றில் நிரந்தரமாக வசிக்க வேண்டும் என்று அவள் விரும்பினாள்.

அந்த காம்பிற்கு அமேலியாவின் குடும்பம் வந்து சேர்வதற்குள் இருட்டாகிவிட்டது. அவர்களுடைய பழைய கார் லேபர்-கேம்ப் எண் 12 ற்கு முன் வந்து நின்றது.

“இதே அறையில் தானே போன வருடம் நாம் தங்கியிருந்தோம்?” என்று அமெலியா தன் குடும்பத்தாரிடம் கேட்டாள். ஆனால் ஒருவருக்கும் எந்த ஞாபகமும் இல்லை.
ஆனால் அதை தெரிந்து கொள்வது மிகவும் முக்கியமாக பட்டது அமெலியாவுக்கு . ஒவ்வொரு வருடமும் அமெலியா அதே இடத்தில் திரும்ப திரும்ப வசித்தாலும், பள்ளிக்கூடம் சென்றிருந்தாலும், அங்கேயே வேலை செய்தாலும் அங்கு வாழ்ந்ததிற்கான தடங்களே இல்லாமல் போகி விடும். அமெலியாவிற்கு தனக்கென்று ஒரு இடம் நிரந்தரமாக வசிக்க அமையாதா என்று ஏங்கினாள்.

அப்படி அமெலியா ஏங்கும் போது அவள் அம்மா “ஒரு நாள் கண்டிப்பாக அமையும்” என்று அவளுக்கு உற்சாகமூட்டுவாள். ஆனால் அந்த ஒரு நாள் வருவதாக தான் தெரியவில்லை.







“அம்மா நான் எங்கு பிறந்தேன்?” என்று அமெலியா தன் தாயிடம் கேட்டாள்.

அவளுடைய அம்மா மார்ட்டினெஸ் ஒரு நிமிடம் யோசித்த பின் புன்னகை புரிந்தாள். “ம்.. எங்கு பிறந்தாய் நீ ?” என்று யோசித்து கொண்டே ம்.. “யூபா நகரம்” என்று நினைக்கிறன் என்று கூறினாள். ஏனென்றால் அங்கு தான் நங்கள் பீச் பழங்கள் பறிப்பதற்காக வேலைக்கு சென்றிருந்தோம். “ஆமாம் பீச் பழங்கள்” என்று நினைவு கூர்ந்தார் மிஸ்டர் மார்ட்டினெஸ். அப்படியென்றால் நீ ஜூன் மாதத்தில் தான் பிறந்திருப்பாய்.

அமெலியா பெருமூச்சு விட்டாள். மற்ற அப்பாக்கள் எல்லாம் தங்கள் பிள்ளைகளின் பிறந்த நாளை இந்த தேதி, ஆண்டு என நினைவு வைத்திருப்பார்கள். ஆனால் அவள் தந்தையோ எந்த பயிர் எப்போது விளையுமோ அதை வைத்தே எல்லா நிகழ்வுகளையும் நினைவு கொள்வார்.





அடுத்த நாள் விடியற் காலையிலேயே எல்லோரும் எழுந்து விட்டனர். காலை 5 மணி முதல் எட்டு மணி வரை அமெலியா குடும்பத்தினர் ஆப்பிள் பறிக்கும் வேலையை செய்தனர். அமெலியா தூக்க கலக்கத்தில் இருந்தாலும் அவள் பறிக்கின்ற ஆப்பிள் பழங்கள் அடிபடாமல் பார்த்து கொண்டாள்.

காலை வேலைகள் முடிவதற்கு முன்னே அமெலியா வின் தோல் பட்டையும், மென்மையான கைகளும் வலிக்க தொடங்கிவிடும், வேலைகள் முடிந்தவுடன் அவள் ஒரு ஆப்பிளை எடுத்து கொண்டு பள்ளியை நோக்கி ஓடுவாள்.

போன வருடம் அமெலியா பில்லமொரே தொடக்கப்பள்ளியில் 6 வாரம் படித்தாள். அப்போது பாடம் நடத்திய ஆசிரியர் அவள் பேரை கூட கேட்டு தெரிந்து கொள்ளவில்லை.பர இந்த வருடம் வந்த ஆசிரியையோ அவள் பெயரை கேட்டு தெரிந்து கொண்டார். எல்லா பிள்ளைகளையும் ஆசையுடன் வரவேற்றார். எல்லோருக்கும் அவரவர் பெயர் கொண்ட முகவரிசீட்டு ஒன்றை  கொடுத்தார். அவருடைய ஆடையிலும் அவர் பெயர் கொண்ட முகவரிசீட்டு ஒன்றை அணிந்திருந்தார். அதில் மிஸஸ் ராமோஸ் என்று எழுதியிருந்தது.

அன்று சில நேரம் கழித்து  மாணவர்களிடம் அவரவருக்கு பிடித்த ஒரு விஷயத்தை வரைய சொன்னார். பிள்ளைகளே “உங்களுக்கு மிகவும் பிடித்த ஒன்றை எல்லோரிடமும் பகிர்ந்து கொள்ளுங்களேன்” என்றார்.

அமெலியாவுக்கு தெள்ள தெளிவாக தெரியும் அவளுக்கு என்ன வேண்டுமென்று.            அவள் ஒரு அழகான வெள்ளை வண்ணம் கொண்ட ஒரு வீட்டை வரைந்தாள். அதன் வாசலில் ஒரு பெரிய மரத்தையும் வரைந்தாள். அமெலியா வரைந்து முடித்தவுடன் அவள் வரைந்த படத்தை மிஸஸ் ராமோஸ் எல்லோருக்கும் காண்பித்தார். பின்னர் அமெலியாவை பாராட்டும் வகையில் அவள் வரைந்த படத்தில் ஒரு சிகப்பு வண்ணம் கொண்ட ஒரு காகித நட்சத்திரத்தை ஓட்டினார்.

அந்த நாள் முடியும் முன்பே எல்லோருக்கும் அமெலியா எல்லோருக்கும் பரிச்சியம் ஆகி விட்டாள். அமெலியாவுக்கு இது போன்ற இடத்தில தான் நிரந்திரமாக தங்கி  விட வேண்டும் என்று ஆசை.





அமெலியா இந்த மகிழ்ச்சியான நாளின் நிகழ்வுகளை தன் அம்மாவிடம் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று ஆசை கொண்டு விரைந்து சென்றாள். சீக்கிரமாக வீடு சென்றடைய ஒரு குறுக்கு பாதையில் பயணித்தாள். அப்போது தான் அந்த புதிய பாதையை கண்டுபிடித்தாள்.



அமெலியா அதை ஒரு அழகிய வழியென்று ஏன் அழைத்தால் என்றால் அது குறுகிய வழியாக இருந்தாலும் சுற்றி பாறைகள் நிறைந்த பாதையாக இருந்தது. அது தானாகவே உருவான பாதை போன்றே இருந்தது.

அந்த பாதை புல்வெளியின் நடுவே இருந்தது. இரு பக்கமும் அடர்ந்த செடி கொடிகள் இருந்தன. அந்த பாதையின் இறுதியில் ஒரு பெரிய மரம் இருந்தது. அதன் அடி பாகம் பெரிதாகவும், அதன் கிளைகள் விரிந்தும் பறந்தும் கிடந்தது. அதன் வயதை கணிக்கமுடியாதது போல இருந்தது. இது போல ஒரு மரத்தை அமெலியா அவள் வாழ்நாளில் கண்டதே இல்லை. தன்னுடைய கனவு இல்லத்திற்கு முன் இந்த மரமே இருந்தால் எவ்வளவு அழகாக இருக்கும் என்று கனவு கண்டாள்.

அமெலியா ஆனந்த நடனம் ஆடினாள். அவள் தலை முடி காற்றில் ஆட அவள் சுழன்று சுழன்று சுற்றினாள்.







தன் வேலை மற்றும் பள்ளி முடிந்த பின் ஒவ்வொரு நாளும் அமெலியா அந்த மரத்தடியில் அமர்ந்து அவள் தன் வீட்டிற்கு வந்து விட்டதாய் கற்பனை செய்து கொள்வாள்..

உலகத்தில் எந்த இடத்தை விடவும் இந்த மரத்தடியை தனக்குறியதாய் ஆக்கி கொள்ள வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டாள்.



அறுவடை காலம் முடியும் நேரமும் நெருங்கிவிட்டது.
அமெலியாவுக்கு அந்த இடத்தை விட்டு எப்படி செல்வது என்று ஒரே குழப்பமாய் இருந்தது.

அவள் தன் தங்கை, பெற்றோர், சகோதரன் ஹெக்டர், காம்பில் இருந்த அண்டை வீட்டுக்காரர்கள் என எல்லோரிடமும் ஆலோசனை கேட்டாள்.
அவளுக்கு கிடைத்த பதிலும் விசித்திரமானவையாகவே இருந்தது

அமெலியாவுக்கு ஒரு இரும்பு தகர பெட்டி ஒன்று கிடைத்தது. அந்த பெட்டி ஒரு குப்பைத்தொட்டியில் கிடைத்தது. துரு பிடித்திருந்தாலும் அது அவளுக்கு ரொம்பவும் பிடித்து போனது. ஏதோ அது தான் அவளுடைய கேள்விகளுக்கு பதில் போல தோன்றியது.

அந்த பெட்டி யில் தனக்கு பிடித்த பொருட்களை சேமிக்க தொடங்கினாள். அவளுடைய அம்மா கிறிஸ்துமஸ் படுக்கைக்கு கொடுத்த ரிப்பனை அதில் வைத்தாள். மிஸஸ் ராமோஸ் கொடுத்த கொடுத்த பெயர் முகவரிசீட்டை வைத்தாள். அதன் பின் அவள் வகுப்பறையில் வரைந்த படத்தை அந்த சிகப்பு வண்ணம் கொண்ட காகித நட்சத்திரத்தோடு அந்த டப்பாவில் வைத்தாள்.

கடைசியாக ஒரு காகிதத்தை எடுத்து அந்த அழகான பாதையை வரைந்தாள். நெடுஞ்சாலையிலிருந்து அந்த அழகான மரம் வரை வரைந்தாள். அந்த பாதைக்கு "அமெலியாவின் பாதை" என்று பெயரிட்டாள். பின்னர் அதை மடித்து அந்த பெட்டி யில் வைத்தாள்.







ஆப்பிள் பழங்களின் அறுவடை காலம் முடிந்த பின் அமெலியாவின் குடும்பமும், மற்ற தொழிலாளிகளும் அந்த இடத்திலிருந்து வேலையை தேடி வேறொரு இடத் திற்கு  கிளம்ப தொடங்கினர். அமெலியா கடைசி யாக ஒரு முறை அவளுக்கு பிடித்த பாதையை நோக்கி நடந்தாள், கைகளில் அவளுடைய பொக்கிஷம் நிறைந்த பெட்டியும் இருந்தது.

மரத்தின் அருகில் ஒரு குழியை தோண்டினாள். அதில் அவளுடைய பெட்டியை வைத்தாள், அதன் மேல் மண்ணை இட்டு மூடினாள். அதை யாரும் பார்க்க முடியாத வகையில் அதன் மேல் ஒரு பெரிய பாறையை நகர்த்தி வைத்தாள்.

அமெலியா தன் வேலைகளை முடித்த பின் கடைசியாக ஒரு முறை தனக்கு பிடித்த மரத்தை ஆசையாக பார்த்தாள். இந்த இடம் தான் தனக்கானது என்றும்,  மீண்டும்  இந்த இடத்திற்கே வரவேண்டும் என்று மனதில் வேண்டிக் கொண்டாள்.



நான் மீண்டும் வருவேன் என்று மெலிதாக சொல்லி கொண்டு திரும்பி நடக்க தொடங்கினாள். எல்லையற்ற மகிழ்ச்சியோடு வானத்தை நோக்கி சிரித்து கொண்டே புல் வெளியில் ஓடினாள்.





அமெலியா கேம்ப் வந்தடைந்த போது அவளுடைய குடுமபத்தினர் அனைவரும் எல்லாப் பொருட்களையும் காரில் ஏற்றி முடித்திருந்தனர். அமெலியா ஒரு கணம் எல்லோரையும் பார்த்து விட்டு பெரு மூச்சு விட்டாள். பின்னர் அவர்களுக்கு உதவி செய்ய தொடங்கினாள்.

அமெலியாவின் தந்தை வரைபடத்தை எடுத்து பார்த்து கொண்டிருந்தார் . முதல் முறையாக அவள் கண்களில் கண்ணீர் இல்லை.

## ஆசிரியர் குறிப்பு

அமெலியா லூயிஸ் மார்ட்டினெஸ் மற்றும் அவளுடைய குடும்பத்தினர் மேலும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களை புலம்பெயர்ந்த தொழிலாளர்கள் என அழைக்க படுகின்றனர் ஏனென்றால் அவர்கள் வேலையை தேடி ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு சென்று கொண்டே இருப்பவர்கள். இந்த புலம்பெயர்ந்த தொழிலாளர்கள் முக்கால் வாசி பேர் உலகின் வெவ்வேறு பாகத்திலிருந்து வருபவர்கள் உதாரணத்திற்கு மெக்ஸிகோ, தென் அமெரிக்கா, கரிபியன் தீவு போன்ற நாடுகளிலிருந்து. ஆனால் அனைவருமே அமெரிக்க குடிமக்களாகவே இருப்பார்கள்.

சிலர் குடும்பத்தில் ஆண் மக்கள் மட்டும் ஊர் ஊராக சென்று வேலை பார்த்து விட்டு அறுவடை முடிந்த பின்னர் வீட்டிற்கு குடும்பத்திடம் திரும்புவார்கள். பலர் குடும்பத்தோடு சேர்ந்து வேலைக்கு செல்வார்கள். வறுமையின் காரணமாக அவர்களுடைய குழந்தைகளும் அவர்களோடு சேர்ந்து காடுகளில் வேலை செய்வார்கள்.

தொடர்ந்து ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு புலம் பெயர்ந்து கொண்டே இருப்பதால் இக்குழந்தைகள் யாரிடமும் பழகும் வாய்ப்பு அமையாமல் போகிறது. இதனால் நண்பர்கள் யாரும் தொடர்ந்து இருப்பதே இல்லை. என்னுடைய இக்கதையின் நோக்கமே ஒரு குழந்தையின் வாழ்க்கையிலாவது நம்பிக்கை விதைக்க வேண்டுமென்பதே. அமெலியாவுக்கு வாழ்க்கையில் அவளுக்கென்று ஒரு இடம் நிரந்தரமாக இருப்பதாக சொல்லியதன் காரணம் அதுவே.